உ

ஓம் சிவமயம்

# ஸ்ரீ விநாயகர் தோத்திரம்

## கணபதியிடம் முறையீடு

இது தஞ்சை / சென்னை - சூளை

ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள்

அருளிய

சிவா அமிர்தம் ஆத்மஞானமென்னும் நூலிலுள்ளது.

சிவாமிர்த மௌன ஞான சபையாரால்

விநாயக சதுர்த்தியின்போது அன்பளிப்பாக வெளியிடப் பெற்றது:

பராபவ ஆண்டு புரட்டாசித் திங்கள் 1966

சென்னை, சூளை.

ஓம்

ஓம் கணபதியே நம:

# முன்னுரை



அனைத்துலகங்களும் தோன்றி நிலவக்கூடிய சர்வ ஆன்ம கோடிகளுக்கும் ஆதாரமான பிரணவ சொரூபமாய் விளங்கும் விநாயக பெருமானை உண்மையான அன்பு பக்தியுடன் நாள் தோறும் பூசிப்பது அவசியமும் கடமையும் ஆகும். அத்துடன் முக்கியமாக விநாயக சதுர்த்தசியின் போது விரதம் அனுட்டித்து அன்பு பக்தியுடனும் மன ஒருமைப் பாட்டுடனும் தூய்மையுடனும் இந்நூலிலுள்ள பாடல்களை மன உருக்கமாகப் பாடி வழிபட்டு

வருதலுடன் தினசரி வழிபாட்டிலும் ஓதி வழிபட்டு வருவீர்களானால் எல்லாவித கஷ்ட நஷ்டங்களும் சரீரப் பிணிகளும் தரித்திரப் பிணியும் மலட்டுத்தன்மையும்—எல்லா குறைபாடுகளும்—பேய், பிசாசு, பில்லி சூனியம் முதலியவைகளும் மாயை இருவினைப் பவப் பிணிகளும் நீங்கப் பெற்று இகபர சுக போகத்திற்குரிய எல்லா நலன்களையும் அடைந்து ஆனந்திப்பீர்களாக.

உலகெலாம் இன்புறுவாய வாழ்க!
ஓம்—சாந்தி—சாந்தி—சாந்தி.

# மகா கணபதி வணக்கம்

## எழுசீர் விருத்தம்

சுத்தமா வெளியாய்க் குணம்குறி இல்லாச்
    சொரூபமாய் விளங்கிடும் கடவுள்
நித்தியா னந்த மங்கள வடிவாய்
    நின்றருள் பரசிவம் தன்னைச்
சித்தமா முள்ளத் தாவலும் தீரத்
    தெரிசித்து அருள்நிலை பெற்றும்
முத்தியா மின்பக் கதிபெற்று முய்ய
    முதல்நிலைக் கடவுளைப் பணிவாம். 1.

## அறுசீர் விருத்தம்

அகரமா வடிவாய்ச் சர்வ அண்டங்கள் தமை யளித்தும்
உகரமா வடிவாய்ச் சர்வ உயிரெலாம் அருளிக் காத்தும்
மகரமா வடிவாய்ச் சேர்க்கும் மாசிவம் அமிர்தப் பாடல்
பகரமா வடிவாம் தொப்பைக் கணபதி பாதம் போற்றி. 2.

அரனருள் மைந்தனுகி அத்தியின் முகம் படைத்துத்
திரமுறும் அசுரர் மாளச் செய்துநற் றேவர் மீளத்
தரணியில் முனிவர் சொன்ன சரிதையைக் கிரியிற் கோடாற்
கரமதால் வரைந்த முக்கட் கணபதி சரணம் போற்றி. 3.

### வேறு

பிரணவப் பொரு ளாகிய பெருமான்முக்
கரண மற்றவர் காணும் பரன்துன்ப
மரணமும் வினை மாற்றுமாக் கணபதி
சரண கமலத்தைச் சந்ததம் போற்றுவாம். 4.

பேசவொணு மூலப் பொருளதாய் நின்றுமா
ஈச னருள்சுத னுகவே வந்துதம்
நேசம் வைத்தவர்க் கருள்செய்து நேர்துயர்
நாசம் செய்கண பதிபதம் நாடுவாம். 5.

# சிவ கணபதி வணக்கம்

ஓங்காரத் துட்பொருளா யொலியு மாகி
    உயிர்களுக்கெல் லாமுயிரா யுணர்வு மாகி
மாங்கென்ற பரவெளியாய் மௌன மாகி
    மாசற்ற சுகவடிவாய் மாரு தாகி
ஆங்கென்ற அருள்வடிவா யர னு மாகி
    அமர்ந்தபர ஈசனது அருளால் வந்த
ஹுங்காரக் கணபதியை உள்ளந் தன்னுள்
    உண்மையுட னனுதினமும் உச்ச ரிப்பாம். 1.

ஆதியா யந்தநடு வல்ல வாகி
அண்டங்கள் பலவுமா யனைத்து மாகிச்
சோதியாய்ப் பரசிவமாய்த் துலங்கு மீசன்
சுதனுமா யானைமுகச் சொருப மாகி
தீதிலாத் தேவர்களைச் சிறையில் வைத்த
திறங்கொண்ட கயமுகனைச் சிதைத்தா னாகி
கோதிலா அன்பரையாட் கொண்டு காக்கும்
குணக்குன்றுங் கணபதியைக் குறித்து நிற்பாம். 2.

அருவமுட னுருவமா யல்ல வாகி
அரும்பொருளாய் நின்றும்தம் அடியார்க் கெல்லாம்
திருவுருவாய்க் காட்சிதந் தருள்பு ரிந்தும்
சித்தமதி லிருள்நீக்கித் தெளிவு தந்தும்
கருவுருவா ராதபர கதிய ளித்தும்
கருதியதெல் லாமளித்தே காத்து நிற்கும்
அருளுருவாம் பரசிவத்தி னருளால் வந்த
யானைமுகக் கணபதியை அகத்துள் வைப்பாம். 3.

பாண்டியநாட்டில் திருப்பூவணமென்னும் க்ஷேத்திரத்திற்குத்
தென்கீழ் திசையிலுள்ளதும் பழம் பதியுமான
தஞ்சையம் பதியில் எழுந்தருளி யிராநின்ற

# வினை தீர்க்கும் விநாயகர் தோத்திரம்

அறுசீர்

தேவரும் அயனு மாலும் சித்தரு முனிவர் மற்றும்
யாவரும் போற்று மீசன் அருட்சுத ஞகி நின்றும்
பாவமு வினையு முற்ற பாரிலோ ருய்யத் தஞ்சை
மேவிநின் றருளிச் செய்யும் விநாயகா சரணந் தானே. 1.

அருணனின் ஞெளியின் மேனி யானையின் முகமு மற்றும்
பருவயிற் கரமும் ஐந்தும் பாசமங் குசமுங் கொண்டுந்
திருவருள் நிறைபொற் பாதச் சிலம்புட னன்ப ருய்ய
விரும்பிநின் றருளுந் தஞ்சை விநாயகா சரணந் தானே. 2.

பக்தியும் அன்புந் தந்தும் பனிமல ரெடுத்துந் தூவி
நித்தியம் தொழுது மன்பர் நேசமுங் கூட வைத்தும்
புத்தியும் செல்வந் தந்தும் பொறுமையுந் தருமந் தந்தும்
வித்தையும் ஒழுக்கந் தாரும் விநாயகா சரணந் தானே. 3.

பஞ்சபா வங்கள் நீத்தும் பல்விதப் பிணிகள் நீத்தும்
வஞ்சமும் லோபம் சூதும் மனத்தினுள் ளகந்தை நீத்தும்
நஞ்சுடன் பகையும் பேய்கள் நாடிடா நீத்து மாள்வாய்
விஞ்சையோர் போற்றுந் தஞ்சை விநாயகா சரணந் தானே.

அனைத்துயிர்ப் பேதம் நீத்தும் அகத்தினுள் ளன்பு வைத்தும்
மனத்தினுட் பற்றை நீத்தும் மாசிலா ஞானந் தந்தும்
கணத்திலுந் துன்ப மில்லாக் கதிதனிற் சேர முன்னம்
வினைப்பய னதனைத் தீர்ப்பாய் விநாயகா சரணந் தானே, 5.

# வினைதீர்க்கும் விநாயகர் மாலை

## வேறு

அனைத்துலக மும்போற்றும் அரனார் திருமகனே
உனைத்தினமும் பாடி உள்ள முருகி நிற்கும்
எனக்கும்நீ அன்புவைத்து மினிதுடன் வந்தருளி
வினைப்பயனை நீத்தருளும் வினைதீர்க்கும் விநாயகனே. 1.

பத்தியுடன் புட்பம் பரிவுடன் தானெடுத்துச்
சித்த மகிழ்வுடநின் றிருவடியி லேசாத்தி
எத்தினமும் நின்னை யேத்திப் பணிந்திடுவேன்
வித்தகனே ஐயா வினை தீர்க்கும் விநாயகனே. 2.

பாடும் நெறியதுவாம் பத்திநெறி யானறியேன்
தேடும் நெறியதுவாம் சித்திநெறி யானறியேன்
நாடும் நெறியதுவாம் ஞானநெறி யானறியேன்
வீடுறுவ தெப்படியோ வினைதீர்க்கும் விநாயகனே. 3.

உனேயே நினைந்துநினைந் துருகிஉருகி மனம்
கனலில் இடுமெழுகாய்க் கசிந்து மழுது நிற்கும்
எனையுநீ கண்பார்த்து இனிதுடன் வந்தருளி
வினைதனைத் தீர்த்தருளும் வினைதீர்க்கும் விநாயகனே, 4.

ஏற்றிப் பணிந்துபணிந் திருவிழியில் நீர்சொரியப்
போற்றித் தொழுதேனின் பொற்கமலச் சேவடியை
ஆற்றிலே னித்துன்பம் ஐயா நின் னின்பமதில்
வீற்றிருக்க நீயருளும் வினைதீர்க்கும் விநாயகனே, 5.

மாடும் மனைவிமக்கள் மற்றும் பொருள்க ளெல்லாம்
சாடும் எமன்வந்தால் தடுக்க முடியுமோதான்
நாடும் மனந்தடுத்தும் நழுவாப் பரமசுக
வீடுபெறச் செய்வாய் வினைதீர்க்கும் விநாயகனே. 6.

குடும்பமா மல்லலுறுங் கொடிதான சாகரத்தில்
இடும்பையென் றெண்ணுதே யேமாந்து வீழ்ந்தேதாம்
படும்பாடு இன்னதெனப் பார்த்து மதில்வீழா
விடுத்துநின் கரைசேரும் வினைதீர்க்கும் விநாயகனே. 7.

தந்தை புரமெரிக்கத் தானேறிச் சென்றதொரு
அந்தமுறு மாதேரின் அச்சுதனை நீயொடித்தாய்
எந்தன்றே ராமுடம்பின் னிச்சையா மச்சுதனை
விந்தையாய் நீயொடிப்பாய் வினைதீர்க்கும் விநாயகனே. 8.

அமரர்களைச் சிறையிலடைத்த கயமுகனைச்
சமர்செய்துங் கொன்றேநீ தானவரை மீட்டுவித்தாய்
எமனும் பவவினையும் இச்சைதனை யொழித்தும்
விமலபத மருள்வாய் வினைதீர்க்கும் விநாயகனே. 9.

செந்தமிழ் மாலையுடன் தினமுந் தொழுதுவந்த
அந்தமுறும் ஔவையாருக் கன்பாயருள் புரிந்தாய்
வெந்தமிழ் மாலையுடன் விடாதுமுனைத் தொழுதேன்
விந்தையுடன் வந்தருளும் வினைதீர்க்கும் விநாயகனே. 10.

மாங்கனிக் காகவேதான் வலம்வந்தாய் தந்தைதனை
தீங்குறுமென் னுளக்காயைத் திருத்திப் பழுக்கவைத்துப்
பாங்கான நற்கனியாய்ப் பற்றிடுவாய் விட்டிடலோ
வேங்கையின்முன் கன்றுவேன் வினைதீர்க்கும் விநாயகனே.

நந்தவனம் நீர்பாய்ச்ச நாடிநின்ற சோழனுக்காய்
அந்தமுடன் கெண்டிகவிழ்த் தாற்றைப் பெருக்குவித்தாய்
உந்தனையே நாடிநிற்கும் வொப்பிலா அன்பெனக்கு
விந்தையுட னீபெருக்கும் வினைதீர்க்கும் விநாயகனே. 12.

அன்பென்னும் ஆற்றை அளவில் பெருக்கிவிட்டால்
துன்பமும் வல்வினையுந் தொலையாப்பா மிச்சையுடன்
வன்கொடு மாயையற்றே வழுவாத போதமுறும்
வென்கொடும் பவமறுமே வினைதீர்க்கும் விநாயகனே. 13.

வாராயோ அண்ணுநீ வந்தொருகால் நின்காட்சி
தாராயோ வென்றேநான் தயங்கியும் வாடுகின்றேன்
பாராயோ வென்தன்முகம் பாராது விட்டிடிலோ
வேறோர் துணையுண்டோ வினைதீர்க்கும் விநாயகனே. 14.

இந்திரசா லம்போன்ற இவ்வுலக போகமதிற்
தந்திரமாய் வீழ்த்தியெனைத் தவித்திடவு நீபார்த்தாய்
அந்தமுடன் வந்தெனக் கருள்புரிவ துந்தனுக்கு
விந்தையோ சொல்வாய் வினைதீர்க்கும் விநாயகனே. 15,

மாதர்க ளிச்சையெனு மாயா மயக்கமதிற்
காதலுற்றே வீழ்ந்துங் கஷ்டப் படுவதுடன்
சாதல் பிறப்புடனும் தப்பா நரகில்விழும்
வேதனையை நீக்கியருள் வினைதீர்க்கும் விநாயகனே. 16.

பெண்களி னிச்சையெனும் பெரிதாம் நரகத்திலும்
மண்பொன் னிச்சையிலும் மாழாமல் நீகாத்தும்
கண்கொளாக் காட்சிக்கென் கருத்துக்கிச் சைவையும்
விண்பொரு ளேஐயா வினைதீர்க்கும் விநாயகனே. 17.

அழுது மழுதுதினம் ஆருயிப் பெருகியேதான்
தொழுதுந் தொழுதுமுனைத் துதித்துமுருகி நின்றேன்
பழுதுரு நின்னருளைப் பாலனுக்கு நீயருள்வாய்
விழுப்பொருளே ஐயா வினைதீர்க்கும் விநாயகனே. 18.

வாராயோ ஐயாநீ வந்துகண்ணீர் துடைத்துஞ்
சேராயோ நின்னருகே சேர்த்து மிகவைத்துத்
தாராயோ நின்னருளைத் தாராவிடில் இவ்வுலகில்
வேறுதுணையுண்டோ வினைதீர்க்கும் விநாயகனே. 19.

நின்னைச் சரணடைந்தும் நெக்குருகி வாடிநின்றும்
இன்னமுந் தன்மனது இரங்கவில்லை யோஐயா
உன்னையே தஞ்சமென உற்றே னருளாவிடில்
வென்பவத்துக்குட்படுவேன் வினைதீர்க்கும் விநாயகனே. 20.

பத்தியுஞ் செய்து முனைப் பாடியுருகி நின்றேன்.
சித்தமல மூடனுந் தீவினையெல் லாமறுத்தும்
முத்தியுஞ் சித்திபெற முடிவான மோனநிலை
வித்தகா நீயருள்வாய் வினைதீர்க்கும் விநாயகனே. 21.

சிந்தை யிரங்கிவந்துன் றெரிசனந் தந்தருளி
பந்தமுதற் பற்றறுத்தும் பரமசுக வாழ்வளித்தும்
அந்தகனும் வாராமல் அருளான நின்னொளியில்
விந்தையாய்ச் சேர்த்தருளும் வினைதீர்க்கும் விநாயகனே. 22.

வேறு

வினைதீர்க்கும் விநாயகனின் நாமம் கேட்க
    வினைகளது பயந்தென்னுள் மறைந்திற் றம்மா
வினைதீர்க்கும் விநாயகன்தன்னைப் பாட
    வினைகளது வெளிதன்னில் நகர்ந்திற் றம்மா
வினைதீர்க்கும் விநாயகன் தனைப்பூ சிக்க
    வினைகளது பறந்துதா னோடிற் றம்மா
வினைதீர்க்கும் விநாயகன் தனைத்தியா னிக்க
    வினைகள் முதல் யாதற்றே னின்பப் பேறே.

ஓம் சிவமயம்

# சிவார்ச்சனைக்குரிய போற்றித் திருப்பஞ்ச தசி

---

## போற்றி - 108 - அறுசீர்.

சிவமெனும் எந்தாய் போற்றி
சின்மயப் பொருளே போற்றி
தவமுறும் இறைவா போற்றி
சச்சிதா னந்தா போற்றி
அவமறும் ஒளியே போற்றி
ஆனந்த வடிவே போற்றி
பவமறும் மருந்தே போற்றி
பரமனே போற்றி போற்றி. 1.

சங்கரா சர்வா போற்றி
சகத்திரா ஏகா போற்றி
பொங்கரா வணிந்தோய் போற்றி
புனிதனே அஞதி போற்றி
மங்களா அமிர்தா போற்றி
மான்மழுக் கையா போற்றி
கங்கைசேர் சடையாய் போற்றி
கர்த்தனே போற்றி போற்றி. 2.

தந்தையுந் தாயே போற்றி
சகமெலாம் ஈன்றோய் போற்றி
சிந்தையும் உணர்வே போற்றி
தேகமும் உயிரே போற்றி
அந்தமும் இன்பே போற்றி
அன்புடன் அறமே போற்றி
பந்தமும் நீக்கும் ஞானப்
பரிதியே போற்றி போற்றி. 3.

விண்ணுடன் ஐந்தே போற்றி
மேவிடும் சுகமே போற்றி
எண்ணுடன் எழுத்தே போற்றி
இரவியும் மதியே போற்றி
கண்ணுடன் மணியே போற்றி
காட்சியும் ஒளியே போற்றி
பண்ணுடன் பொருளே போற்றி
பரசிவா போற்றி போற்றி. 4.

சுத்தமா வெளியே போற்றி
சொற்பதம் கடந்தோய் போற்றி
நித்தியா னந்தா போற்றி
நிற்குண நிமலா போற்றி
வித்தியா தரனே போற்றி
விளங்கு மெய்ப்பொருளே போற்றி
முத்தியா மமிர்த ரூப
முத்தனே போற்றி போற்றி 5.

ஈசனே போற்றி உண்மை
இறைவனே போற்றி அன்பர்
நேசனே போற்றி யென்றும்
நிர்மலா போற்றி பாவ
நாசனே போற்றி சர்வ
நாதனே போற்றி கைலை
வாசனே போற்றி யெல்லாம்
வல்லவா போற்றி போற்றி. 6.

முத்தனே போற்றி தேவர்
முதல்வனே போற்றி வல்ல
சித்தனே போற்றி ஞானச்
செல்வனே போற்றி உண்மை
அத்தனே போற்றி யென்றும்
ஆனந்தா போற்றி சர்வ
வித்தனே போற்றி மேலாம்
விமலனே போற்றி போற்றி. 7.

கர்த்தனே போற்றி முக்கண்
கடவுளாய் நின்றோய் போற்றி
நிர்த்தனே போற்றி யெங்கும்
நிறைந்தருள் பரனே போற்றி
பித்தனே போற்றி மிக்க
பேரருள் வடிவே போற்றி
சுத்தனே போற்றி யொப்பில்
சுந்தரா போற்றி போற்றி. 8.

ஆதியே போற்றி என்றும்
அந்தமில் பரனே போற்றி
சோதியே போற்றி மிக்க
சூக்குமப் பொருளே போற்றி
நீதியே போற்றி இன்ப
நிர்த்தனே போற்றி அம்பாள்
பாதியே போற்றி மேலாம்
பரம்பொருள் போற்றி போற்றி 9.

அருவமாய் நின்ருேய் போற்றி
அருவு ருவாஞய் போற்றி
சருவமாய்த் திகழ்ந்தாய் போற்றி
தத்துவம் கடந்தோய் போற்றி
ஒருவரும் அறியாய் போற்றி
உயிரெலாம் கலந்தோய் போற்றி
கருணையாம் உருவே போற்றி
கடவுளே போற்றி போற்றி. 10.

உலகெலாம் படைத்தோய் போற்றி
உள்ளிருந் தருள்வோய் போற்றி
நலமெலாம் தருவோய் போற்றி
நாடியும் காப்போய் போற்றி
தலமெலாம் அளிப்போய் போற்றி
சார்ந்திடச் செய்வோய் போற்றி
பலவினை தீர்ப்போய் போற்றி
பரசுகா போற்றி போற்றி. 11.

தேவரைக் காத்தோய் போற்றி
திரிபுர மெரித்தோய் போற்றி
மூவரு மானுய் போற்றி
முத்தொழில் செய்வோய் போற்றி
பாவங்கள் தீர்ப்போய் போற்றி
பரகதி அருள்வோய் போற்றி
யாவையும் கடந்தோய் போற்றி
அரகரா போற்றி போற்றி. 12.

அன்பர்கட் கருள்வோய் போற்றி
அகத்தினுள் நின்ருேய் போற்றி
துன்பங்கள் தீர்ப்போய் போற்றி
சுகமெலாம் தருவோய் போற்றி
தென்புறச் செய்வோய் போற்றி
தீவினை அறுப்போய் போற்றி
இன்பமும் அளிப்போய் போற்றி
இறைவனே போற்றி போற்றி. 13.

திங்களும் கொன்றைச் சூடித்
திருவுமை கொண்டோய் போற்றி
பங்கயத் தயனுமாலும் பணிந்
திடும் பரனே போற்றி
மங்கிடா விளங்கி நிற்கும்
மாபரஞ் சுடரே போற்றி
எங்கணும் நிறைந்து நின்ற
ஏகனே போற்றி போற்றி 14.

கற்பனை முதலா யாவும்
கடந்துநின் றருள்வோய் போற்றி
அற்புத மாகி நின்றும்
ஐந்தொழில் செய்வோய் போற்றி
தற்பரஞ் சோதி யாகிச்
சகமெலாம் நிறைந்தோய் போற்றி
சிற்பர வெளியாய் நின்ற
சிவசிவா போற்றி போற்றி. 15.

ஓம் சாந்தி—சாந்தி—சாந்தி—ஓம்.

## ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமிகள் அருளிய நூல்கள்

| | |
|---|---|
| சிவாஅமிர்தம் ஆத்மஞானம் (ராப்பர் பைண்டு) | 3–00 |
| (கலிகோ பைண்டு) | 4–00 |
| ஆதிபூர்வக்யான உண்மைப் பிரகாசம் | 1–50 |
| பக்த ஞான பல உண்மை விளக்க வேடிக்கை இன்பசாகரம் | 0–75 |
| ஆத்மஞான பாசியம் அல்லது பக்த இன்ப சாகரம் | 1-00 |
| திருஞானப் பாவை தனிப்புத்தகம் | 0–25 |



தேசீய மறுமலர்ச்சி அச்சகம், சென்னை-2.